# தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேஙகடேச சுப்ரபாதம (ஸ்தோத்ரம, ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன) | 0—50 |
| 2. | ஏழுமலே யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோததமன் | 1—00 |
| 4. | பகவத் சநதேசம் (தமிழாக்கம்) டாகடர். பொன் சௌரிராஜன | 0—50 |
| 5. | இந்து சமயக கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நிதயாநுஸநதானம் (வடகலே) | 4—00 |
| | நித்யாநுஸநதானம் (தெனகலே) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கணணன் பேசுகிறுன —நஜன | 0—50 |
| 10. | சுவாமி படடினததார டாக்டா. ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸவரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸஙரஹம —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாகடர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மாாக்கணடேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னேபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸவர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாகடா. டி. அர்ககசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாஙகயானம் —திரு. ஆா. ராமமூாததி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷயம்-தொகுதி - 1 திரு. —ஆர் ராமமூர் ததி சாமா | 30—00 |

மேறபடி நூலகளுக்கான தொகையை வங்கி டி. டி அலலது எம். ஓ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூல மாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செய லாட்சித் தலேவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரிக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

பௌர்ணமி திதி முடிவு அடை யுமபோதுதான சந்திர கிரகணத்தின மததிய காலம் ஆகும். பௌர்ணமி திதி முடியும் முனபே சந்திரகிரக ணம் ஆரமபமாகி கிருஷ்ண பிரதமை யில விட்டுவிடும். அமாவாசை திதி முடிவடையுமபோது சூரிய கிரகணத் தின மத்திய காலம ஆகும். அமா வாசையின முடிவுக்கு முனபே சூரிய கிரகணம ஆரம்பமாகி சுக்கில பிர தமையில விட்டுவிடும. சநதிரன சூரியனுககு மேற்கே இருநது கிழககு பககம நகாநது செல்வதால் சூரிய கிரகணம சூரியனுடைய மேறகுபபகு தியில் ஆரமபித்துக கிழககுப பகுதி யில் விடும. சூரியகிரகணம பெரும் பாலும சூரியனுடைய மேற்கு, வட மேற்கு, தென்மேறகு திககில பிடித்து கிழககு, வடகிழககு, தென கிழக்குக திககில விட்டுவிடும். இது போனறே சநதிரன் பூமிக்குத் கிழக குப பகுதியில் நகாவதால சநதிரகிரக ணம் கிழக்கு, வடகிழககு, தென கிழககு திக்கில் பிடித்து மேற்கு, வட மேற்கு, தெனமேறகு பகுதியில் விட்டுவிடும.

கிரகணங்கள் பூர்ண கிரகணம (Total Eclipse) பர்சுவ கிரகணம் (Partial Eclipse) கஙகண கிரக ணம் (Annur Eclipse) எனறு மூனறு வகைபபடும. சூரிய அலலது சந்திரனுடைய பிம்பம் முழுவதும் மறைக்கபபடுவதறகு "பூர்ண கிரக ணம்" என்றும், கொஞசமாக மறைக் கப்படுவதற்கு "பாாசுவ கிரகணம்" என்றும, நடுவில் மறைக்கப்பட்டு ஓரம ஒரு வளேயததைபோல் பிரகாச மாக தோனறுவதறகு "கங்கண கிரகணம" என்றும பெயர். இநத கங்கண கிரகணம சூரியனுக்கு மட் டுமதான் ஏறபடும. சந்திரனுககு கிடையாது. சநதிரனுடைய பிம பம சூரியனுடைய பிம்பததைச காட்டிலும் சிறியதாக இருப்பது ஒரு காரணமாகும சூரியகிரகணமும சநதிரகிரகணமும் பதினேநது நாட் களுககுள்ளாகவே சில நேரங்களில் ஏற்பட வாயப்பு உணடு.

ஒரு கிரகணம சம்பவித்தப் பிறகு இநதக கிரகணத்தின்பரமபரையைச் சாாந்த அடுத்த கிரகணம் 18 வரு டம 10 அல்லது 11 நாள 7 மணி 43 நிமிடம் கழிதது ஏற்படும் இந்த 18 வருடங்களில் 4 லீப வரு டங்கள வருமபோது 11 நாட்களே யும் கணக்கிட வேண்டும். 4

# ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்

अत्र्यादिसप्तऋषयस्समुपास्य सन्ध्याम्
आकाशसिन्धुकमलानि मनोहराणि ।
आदाय पादयुगमर्चयितुं प्रपन्नाः
शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ॥

அத்ர்யாதி ஸபதரிஷயஸஸமுபாஸ்ய ஸநதயாம
ஆகாசஸிநதுகமலாநி மநோஹராணி |
ஆதாய பாதயுகமாசசயிதும் பரபந்நா:
சேஷாதரி சேகர விபோ தவ ஸுபரபாதம் ||

பதவுரை : சேஷ அத்ரி சேகர விபோ = சேஷ மலைச் சிகரததில் எழுநதருளியிருககும் பரிபூர்ணனே! அதரி ஆதி ஸபத ரிஷய. = அதரி முதலிய ஏழு ரிஷிகளும; ஸந்த்யாம = காலைச சந்தியை; ஸம் உபாஸ்ய = வணங்கிவிட்டு (உடனே); பாத யுகம் = (உன) திருவடிகள இரணடையும; அர்ச்சயிதும் = (மலரிட்டுத) தொழுவதறகாக; மநோ ஹராணி = மனதைக கவரககூடிய (சிறநத); ஆகாச ஸிந்து கமலாநி = ஆகாச கங்கையில் முளைத்தெழுநத தாமரை மலர்களை; ஆதாய = எடுத்துக்கொண்டு; ப்ரபந்நா: = வநது சேர்ந்து விட்டனா; தவ ஸுப்ர பாதம = உனக்கு நறபொழுது புலருக.

கருததுரை :— வெகு தூரத்திலுளள ஸப்த ரிஷிகளும் காலைக கடன்களை முடித்துக்கொணடு வந்துவிட்டனர். நீ துயிலெழுந்து ஸேவை ஸாதித் தருளுக.

குறிப்பு :— ஸப்த ரிஷி-'ரி'யை ரி. ரு. இரண்டிற்கு மிடையாய் உச்சரிகக.

पञ्चाननाब्जभवषण्मुखवासवाद्याः
त्रैविक्रमादिचरितं विबुधा स्तुवन्ति ।
भाषापतिः पठति वासरशुद्धिमारात्
शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ॥

பஞசாநநாப்ஜபவ ஷண்முக வாஸவாத்யா:
த்ரைவிக்ரமாதிசரிதம விபுதாஸ ஸ்துவந்தி |
பாஷாபதி: படதி வாஸர சுததிமாராத
சேஷாதரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம ||

பதவுரை :— சேஷாத்ரி சேகர விபோ = திரு வேங்கடத்துறையும் பரிபூர்ணனே! விபுதா: = தேவர்களில் சிறந்தவரும் நல்லறிவுள்ளவருமான; பஞசாநந அப்ஜபவ ஷணமுக வாஸவ ஆத்யா: = அரன அயன கநதன் இந்திரன் முதலியோர்; தரை விக்ரம ஆதி சரிதம் = மூன்றடிகளால் உலகளநதது முதலிய (உனனுடைய) திவ்ய லீலைகளை; ஸதுவந்தி = புகழ்கினறனா; பாஷாபதி: = மொழிகளுககு இறை வனுகிய தேவகுரு (பிருகஸ்பதி); ஆராத் = தொலைவில (வணககததுடன நின்று கொணடு); வாஸர சுத திம = நாட்களுக்குத் தூயமையளிக்கக் கூடிய பஞசாங்கத்தை; படதி = வாசிககிறுர்; தவ ஸுப்ர பாதம = உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :— அரன் அயன் முதலிய தேவதைகள உன்னுல் தாங்கள் பெறற நன்மைகளைக கூறி உனனைப் புகழகினறனா. காலையில் உன் முன்னிலையில் படிகக வேணடிய பஞ்சாங்கததைத் தேவகுரு படிததுக் கொணடிருக்கிறுர். துயிலெழுநது நீ திருசசெவி சாறற வேணடும்.

குறிப்பு :— பஞச ஆநநன-ஐந்து முகமுள்ளவன் (அரன) - அப்ஜ பவன் (பெருமாள் திருநாபிக்) கமலத்தில் தோன்றியவன் (அயன்). ஷண்முகன் - ஆறு முகங்களை உடையவன் (கநதன்).

ईषत्प्रफुल्लसरसीरुहनारिकेल-
पूगद्रुमादिसुमनोहरपालिकानाम् ।
आवाति मन्दमनिलस्सह दिव्यगन्धैः
शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ॥

ஈஷத ப்ரபுலல ஸரஸீருஹ நாரிகேல
பூகத்ருமாதி ஸுமநோஹர பாலிகாநாம |
ஆவாதி மநத மநிலஸ ஸஹ திவ்யகந்தை:
சேஷாதரி சேகர விபோ தவ ஸுபரபாதம ||

பதவுரை :— ஈஷத் = சிறிது; ப்ரபுல்ல = மலர்நத; ஸரஸீருஹ = தாமரை மலாகளுடையவும; நாரிகேல (தரும) = தென்னை மரங்கள், பூகத் ரும = பாககு மரங்கள; ஆதி = முதலிய மரங்களின ஸுமநோஹர = மிகவும் மனதைக் கவரத்தக்க (மிகச் சிறந்த); பாலிகாநாம = (சிறிது மலர்ந்த) பாளைகளுடையவும்; திவ்ய கந்தை: ஸஹ = சிறநத மணங்களுடன் (உயர்ந்த வாசனையை எடுத்துக்கொண்டு); அநில: = (குளிர்ந்த காலைக) காறறு; மந்தம் = மெதுவாக; ஆவாதி =

வீசுகின்றது; சேஷ அத்ரி சேகர விபோ = திருவேங்கடமுடையானே! தவ ஸுப்ரபாதம் = உனக்கு நல் விடிவு ஆகுக.

கருத்துரை :— பொழுது புலருகின்றது. உனக்கென்றே இம முளரி மலர்கள் முதலியவை சிறுகச சிறுக மலர்கின்றன. குளிர்நத காறறு வீசுகின்றது. நீ துயிலெழுநது இவைகளைக கடைககணிதது அருளல வேணடும்.

उन्मील्य नेत्रयुग मुत्तमपञ्जरस्था
पात्रावशिष्टकदलीफलपायसानि ।
भुक्त्वा सलील मथ केलिशुकाः पठन्ति
शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ॥

உந்மீலய நேத்ரயுக முததம பஞசர ஸதா .
பாத்ராவசிஷ்ட கதலீபல பாயஸாநி |
புகதவா ஸலீலமத கேளிசுகா: படந்தி
சேஷாதரி சேகர விபோ தவ ஸுபரபாதம ||

பதவுரை .— அத = மேலும; உததம பஞசரஸ்தா: = உயாநத கூணடுகளில இருக்கின்றவையும, கேளி சுகா = விளையாட்டினபத்தை உணடுபணணக கூடியவைகளுமான கிளிகள; நேத்ரயுகம் = கண இணையை (இரணடு கணகளையும்); உநமீல்ய = திறந்து; பாதர அவசிஷ்ட கதலீ பல பாயஸாநி = கலங்களில் மிகுந்துள்ள வாழைப்பழம திருக்கன்னல முது (முதலியவை)களை, புகத்வா = புசிததுவிட்டு, ஸலீலம் = களிப்புடன், படந்தி = (உன் திருநாமங்களை) சொலலுகின்றன; சேஷ அத்ரி சேகர விபோ = திருவேங்கடமுடையானே! தவ ஸுப்ரபாதம = உனக்கு நல்விடிவு ஆகுக.

கருததுரை :— உன் திருநாமங்களைக் கூறி உன் பக்தாகளை மகிழ்விப்பதற்காகவே உன் திருக்கோயில் கூணடுகளில வைககப்பட்டிருக்கும ஆடறகிளிகள, நீ முனனிரவு அமுது செய்து கலங்களில் மிகுநதிருககும திருக்கன்னலமுது முதலிய உன் ப்ரஸாதஙகளை உணடு ஆனநதததுடன உன திருநாமஙகளைக கூறுகினறன. நீயும் துயிலெழுநது உன திருநாமங்களின இனிமையைத் துயததல வேணடும.

तन्त्रीप्रकर्षमधुरस्वनया विपञ्च्या
गायत्यनन्तचरितं तव नारदोऽपि
भाषासमग्रमसकृत्करचाररम्यं
शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ॥

தந்த்ரீ பரகாஷ மதுர ஸவநயா விபஞசயா
காயதயநந்த சரிதம தவ நாரதோऽபி |
பாஷாஸமக்ரமஸக்ருத்கரசார ரமயம்
சேஷாதரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— அநந்த = அழிவற்றவனே! நாரத அபி = நாரதரும; தநத்ரீ ப்ரகாஷ = கமபிகளின உயாவால் (கமபிகள உயர்நதனவாயிருப்பதால்); மதுர ஸ்வநயா = இனிய நாதமுடைய; விபஞ்ச்யா = வீணையுடன (வீணையைக் கையில ஏந்திககொணடு), அஸகருத = அடிக்கடி (விரைவாக); கர சார ரம்யம = கைகள ஸஞ்சரிதது (மீட்டுவதால) இனிதாயிருககும வணணம; பாஷா ஸமக்ரம் = ஆழவாராசாராயாகளால் அகததிய மொழியில அருளிச செய்யப் பெறறமையால பூாததியைப பெறறதும, (மொழிகளுககுப் பூர்த்தியை அளிககக கூடியதும, இன்பமாய் வாய் நிறைநது பேசககூடியதும, உயர்நத மொழிகளில இனிய நடையில் வாணிககபபட்டுள்ளதுமான); தவ = உன்னுடைய; சரிதம = சரித்திரததை, காயதி = பாடுகிறாா; சேஷ அதரி சேகர விபோ = திருவேங்கடததுறையும பரிபூாணனே! தவ ஸுப்ரபாதம = உனககு நல விடிவு ஆகுக.

கருததுரை .— ஓரிடத்தும நிலை பெறறு நின்றறியாத நாரத முனிவரும உன பெருமையில ஈடுபட்டு உன திருககோயிலவாயிலில் நிலைபெற்று நினறு வீணையை மீட்டிககொணடு உன திவய சரிதங்களைப பாடுகிறாா. எழுநது திருசசெவி சாறறியருளுக.

भृङ्गावली च मकरन्दरसानुविद्ध-
झङ्कारगीतनिनदैस्सह सेवनाय ।
निर्यात्युपान्तसरसीकमलोदरेभ्यः
शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ॥

ப்ருஙகாவலீ ச மகரந்த ரஸாநுவித்த
ஜுஙகாரகீத நிநதைஸ ஸஹ ஸேவநாய |
நிர்யாதயுபாநத ஸரஸீ கமலோதரேப்ய:
சேஷாதரி சேகர விபோ தவ ஸுபரபாதம ||

பதவுரை :— உபாநத = அருகிலுள்ள; ஸரஸீ = தாமரை மலாகளின உட்பகுதியிலிருந்து; ப்ருங்க ஆவலீ ச = வணடினமும், மகரநத ரஸ அநுவிதத = (இரவு முழுதும் தாஙகள் பருகிய) தேன குழமபு கலநதுள்ள (தேன பருகி மதிததுப் பாடிய); ஜஙகார கீத நிநதை ஸஹ = ரீஙகாரஙகளாகிய பாட்டின ஒலியொடு, ஸேவநாய = (உன்னை வணஙகித) தொழுவதறகாக; நிாயாதி = வெளிவருகினறது. சேஷ அத்ரி சேகர விபோ = திருவேஙகடததுறையும பரிபூாணனே; தவ ஸுப்ரபாதம் = உனககு நறபொழுது புலருக.

கருததுரை .— பொழுது நனகு புலர்நதமையின் தாமரை மலர்கள நனகு மலர்நதுவிட்டன. இரவெலலாம் குவிநதிருந்த அம மலர்களுள் சிறைகிடநது உன ஸேவையை இழநது வருந்திய வணடினங்கள இப்பொழுது வெளிவநது களிப்புடன் பாடிக்கொணடு உன்னைக் கணடு வணங்க வந்திருக்கின்றன. எங்கும நிறைந்தவனே! துயிலெழுந்து அவைகளின அவாவையும் நிறைவேற்றுக.

(தொடரும்)

# வேதங்களும் இராமகாவிய நாயகனும்

இராமாயணததில வேதஙகளின சாரமும், வேத புருஷனுகிய திரு மாலின் அவதாரமாகிய சதபுருஷ னுன இராமபிரானேயும காணகிருேம.

ஸ்ரீராமபிரானுகிய சக்கரவாத்தி யின திருமகனே 'எவர் தர்மததை விட்டு நீஙகுவதிலலேயோ, எவர் தர் மத்தைவிட்டு ஒரு அணுகூட மீறு வதிலலேயோ, அததகைய மனிதனே ஸ்ரீராமன்' எனறு இராவணனே புகழ் கினருன்.

அரககன் மாரீசனும் "ஸ்ரீராமன் தர்மத்தின் மறுபிறபபாகும்" எனறு கூறுகிருன். ஸ்ரீராமன் தாமத்தின் அவதார புருஷன என்று அவரது விரோதிகளும் கூறுகின்றனர். வேதத் தின் பொருள்கள் எல்லாம் இராமா யணத்தில் அடஙகியிருக்கின்றன. வேதங்களின சாரமே இராமாயணம. வேதங்களாக இருககும்பொழுது அவைகளின உபதேசங்கள ஞான மார்க்கத்திற்கு நமமை ஈர்க்கினறன. வால்மீகியின வழியாகவோ, கமபன் மூலமாகவோ, துளசிதாசரின் கவிதை களின் மூலமாகவோ இராமாயணம் அவதரித்த பொழுது, நம்மை, அது தாம மாாககத்திற்கு அழைத்துச செல்கின்றது.

இராமாயணம் என்று கூறும் பொழுது அதில் நான்கு வேதஙகளு டைய சாரத்தையும காணலாம்.

"ரா" என்ற ரகாரம பழைய வேத மான ரிக வேதத்தைக் குறிககும். "ம" என்ற மகாரம சாம வேதத்தை யும், "யா" என்ற யகாரம யஜுர் வேதத்தையும, "ண" என்ற ணகாரம அதர்வண வேதத்தையும் உணாத்து வதாகக் கொள்ளலாம்.

ரிக் வேதத்தில் ஒரு அரசன் எப்படி நாட்டை ஆள வேணடுமெனறும, எந்த விதமாக மககளிடமிருந்து வரி வசூல் செய்ய வேணடுமென்றும், மந் திரிகளே தேர்ந்தெடுக்கும் வழிமுறை களேயும் கணகாணிப்பதை நாம் அறிய லாம்.

நாட்டு மககளுடைய அரசியல் பணபுகளேயும், மககள எபபடி அர சனே மதிகக வேணடுமெனறும், அர சுககு உதவ வேணடிய வழிமுறைகளே யும் ரிக வேதம கூறுகினறது. தசரத சக்ரவாததி ரிக்வேதத்தில கூறியபடி அயோத்தியை ஆணடானென்றும, மக்கள் அரசனிடம எவவளவு அன்பு மும் மதிப்பும வைததிருநதாாகள் எனபதை இராமகாவியததில காண கிருேம. சில முககிய விஷயஙகளில, தசரதன் தன மக்களே கலநதாலோ சிததானென்றும் தெரிய வருகிறது. மககள பிரதிநிதிகளேயும, சிறறரசர் களேயும், பிரபுககளேயும், பெரிய நிலச்சுவானகளேயும கூட்டி தனது மூதத மகனுக்கு (இராமசசநதிர னுககு) பட்டாபிஷேகம செய்யப் போவதாகவும அவாகளுடைய எண் ணத்தைத் தெரிவிககும்படிக் கேட்டுக கொணடான். எல்லோரும தசரனது ஆலோசனேயை ஏறறுக் கொணட னா. ஸ்ரீராமனுக்கு பட்டாபிஷேகம் செய்வதில் அவர்கள தஙகளது ஆனந் தத்தைத் தெரிவித்தனா. தனக்கு மூப்பு வந்துவிட்டதே காரணம் என்று தசரதன கூறியதைக் கேட்டு அனே வரும் அதை வருத்தததுடன ஏற்றுக் கொண்டனர்.

இவவிதமாக ரிக வேதத்தின் சாரததை இராமாயணத்தில பல இடஙகளில் காணலாம. ரிக வேதம் அரசியல தந்திரஙகளேயும் எடுத்துக் கூறுகினறது. சுககிரீவனுக்கு ஸ்ரீ ராமன பட்டம் செயவிதத பொழுது சுக்கிரீவனுடைய அணணன் வாலி யின மகனுகிய அங்கதனுக்கும் இளேய ராஜா பட்டம், ஸ்ரீராமனின ஆலோ சனேயின் பேரில் சூட்டப்பட்டது. அரங்கதனே சாதாரணமாக விட்டு விட்டால் எதிர்காலததில் பல நணபர் களேயும், ஆதரவாளர்களேயும் சேர்த் துக கொண்டு சுக்கிரீவனுக்கு எதிராக புரட்சி நடத்தக்கூடும் என்ற சந தேகம் ஸ்ரீராமன மனதில் தோனறி யிருக்கலாம். அங்கதனேக் காககும் பொறுப்பும் தாரையிடமிருநது சுக் கிரீவனுக்கு மாற்றப்பட்டது.

சாமவேதத்தின சாரததை, குசல வர்கள் இருவரும் பாடிய இராமா யண ஸ்லோகங்களில் காணலாம். இராம காவியத்தை எழுதிய வால மீகி, சுருதி லக்ஷணம பிசகாமல் பல்ராகங்களில் பாட குசலவர்கள கற்றுக் கொணடனர். அஸ்வமேத யாகம செய்து கொணடிருநத ஸ்ரீராம பிரான சிறுவர்கள் பாடின காவியத் தைக கேட்டு ஆனநதம் அடைந்தார். பாடினது தனது சரித்திரமதான் என் றும், பாடியவர்கள தன கண்களே எனவும் அறிநது பனமடங்கு ஆனந்தமடைநதாா.

யஜுர் வேதத்தில் யக்ஞ யம, யாகம், விரதங்கள் நோனபு கள் ஆகியவற்றை அனுஷ்டிகக வேணடிய முறைகளும, வழிகளே யும், அவைகளினுல் அடையும் பலா பலனகளும் கூறபபட்டுளளன. தசர தன்புததிர காமேஷ்டி யாகம, யஜுர் வேதத்தில் கூறியபடி செய்து முடித் தார். அதன் பலனுக திருமாலே, சககரவர்த்தித் திருமகனுக அவ


திரு. எம். கே. ஸ்ரீநிவாசன, பி.ஏ.
சென்னே-39.


தரிததார். தசரதனுடைய துக்கமும களேயப்பட்டது.

நைமிசவனத்தில் ஸ்ரீராமன் செய்த அஸ்வமேத யாகமும் யஜுர் வேதத் தில் கூறபபடும் முறையை ஒட்டியே நடந்தது எனபது யஜுர் வேதத தின சாரம் இராமாயணததில் இருக கிறதெனபதற்குத் தகக சானறு கும்.

அதர்வண வேதம் யுத்தத்தின் முறைகளேயும் வழிகளேயும் வகுத்துக் காணபிக்கின்றன. அஸ்திர உப யோகங்களேயும், உபயோகிக்கும் முறைகளேயும, அவைகளுக்கு இணேந்த மந்திரங்களேயும அது போதிக்கின்றது. கிராதக யுத்தம் நடககக் கூடாது. கதிரவன் மேற்குத் திசையில் மறையும் நேரத்திற்கு

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கபபடுவா)
6-00 ,, 6-30 ,, —சுததி—முதல்மணி
6-30 ,, 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 ,, 12-30 ,, —சுத்தி, 2-வது மணி
12-00 ,, 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 ,, 6-30 ,, —சுத்தி, 3-வது மணி
6-30 ,, 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 ,, 9-30 ,, —சுத்தி, ஏகாநதசேவை

காலை

### வெள்ளிக்கிழமைகளில்

9-00 ,, 10-00 ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள | | | ஆர்ஜித சேவைகள | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உறசவம | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிககிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தாக்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்சசனை(அஷ்டோத்ரம்)செய்ய விருமபும் பக்தாகள் அதற்கான ரூ. 1-50ககான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருநது வசதியுண்டு.

சிறிது முனபாகவே யுத்தங்களை நிறுத்த வேண்டும். இரவில் யுத்தம செய்யக் கூடாது போன்றவற்றைத் திட்டவட்டமாக அறிவிககின்றது. நிராயுதபாணியாக நிற்கின்ற எதிரியைக் கொல்லககூடாது என்பது அது கூறும ஒரு கொள்கையாகும. இதையேதான் தான செய்த தர்ம யுத்தத்தில் ஸ்ரீராமா கையாணடார். இராம இராவண யுத்தத்தில் இராவணன் தேரிழந்து, படை பகக பலமிழநது, விலலிழநது, மதி இழந்து, சொல இழந்து நிராயுதபாணியாக நிற்குங காலையில் "இன்று போய் நாளை வா" என்று இராமன் பெருந்தன்மையாகக் கூறினர். தாம யுத்தத்திற்கு இது ஒரு சானறுகும. இராமன் மனது வைத்திருநதால் இராவணனை அன்றே அப்பொழுதே கொன்று இருக்கலாம். ஆனுல இராவணனுக்கு இராமன அவகாசம் கொடுத்தார். ஆனுல நல்ல புத்தி கொணடு, நனருக சிநதித்து தான் செய்த தவறை உணர்நது, சீதையை இராமனிடம ஒப்புவித்து விட்டு, மன்னிப்பு கேட்க தவறிவிடடான் இராமன கொடுத்த அவகாசம வீணுகிவிட்டது. இராவணன தலை வணங்காதவன. மாபெரும் காவி; அகங்காரத்தின் அவதாரம். மண் டோதரி எவவளவு மன்றுடியும அவன கேட்கவில்லை. மறுநாள் படையுடன் வந்து இராமனிடம் போரிட்டு மாணடான. சத்தியம் நிலைத்தது. அதர்மம் அழிநதது.

இதே தர்ம யுதததத்தை லக்ஷ்மணன்-இநதிரஜித்து போரில காண்கிறோம். இங்கும் தர்மத்திறகுதான் வெறறி. அதர்ம சின்னமாகிய இராவணனின மகன இந்திரஜிததும் மடிந்தான்.

மேற்கூறிய கூற்றுகளிலிருந்து, வேதங்களின சாரத்தை இராமாயணத்தில் பல இடங்களில் காணலாம்.



# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அதயாயம — 18.

பகுதி — 18.

கேடு இல்லாத காமம் எதுவுமே உலகில் கிடையாது. சுவாசிப்பது மிகவும் சாதாரண, அதே வேளையில, மிக இன்றியமையாத செயல். அந்தச் செயலில் தீமை கலந்துளளது. எப்படி? நாம சுவாசிக்கும் பொழுது நாம உள்ளேயிழுக்கும் மூச்சுக் காற்றினில் எததனையோ நுணணுயிாகள சாகின்றன. அவை நமது ஊனக் கணணிற்குத் தெரியாமலிருக்கலாம். அதுபோல நாம் பருகும் நீரில், உண்ணும் உணவில் நுண்ணுயிர்கள் உள்ளன. ஏன்? நமது உடலிலேயே, குறிப்பாக நமது வயிற்றிலே, குடலிலே எத்தனையோ வகையான பூச்சிகள் உற்பத்தியாகினறன வளாகின்றன மடிகின்றன. அப்படியாயின சுவாசிப்பது ஒரு தீமை கலந்த செயல் என்றாகிறது. அதற்காக நாம் சுவாசிக்காமல் இருக்க முடியுமா? நெருப்பு இருநதால் அங்கே புகையும் இருக்கும. செயல் இருநதால் அங்கே குற்றம் அல்லது தோஷம் இருக்கத்தான் செய்யும். யோகி ஒருவன் எடுத்த கருமத்தை தேவ ஆராதனையாகச செயது முடிப்பான். தனது இயல்புக்கு ஒத்த கருமத்தைச செய்வதுவே முறையாகும்.

தனக்கு அமைந்த கருமத்தை எப்படிச் செய்வது என்பதற்கான விளக்கம் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

அஸக்த புத்தி: ஸர்வத்ர
ஜி தாத்மா விகதஸ்ப்ருஹ: |
நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம்
ஸன்யாஸேனுதிகச்சதி || (18-49)

"எப்பொழுதும பற்றற்ற புததியுடையவனும் சிந்தையை அடககியவனும் ஆசையற்றவனுமிருப்பவன் ஸநநியாசத்தால மேலான வினையற்ற பெருநிலையாம் நைஷ்கர்மயஸிததியை அடைகிறான்."

வினைபுரிந்தால் பலன் விளையும என்பதற்காக வினையையே செய்யாமலிருக்க கீதை ஒரு போதும சொல்லவில்லை. மாறாக 'ஓயாது வினையாற்று', 'பலனில பற்றறறு வினையாற்று' என பதுவே கீதையின் சாரமாகும். சும்மா இருப்பது, கடமையிலிருந்து வழுவுவது போன்றவை கீதைக்கு முறறிலும் ஒவ்வாத கருத்துக்களாகும். கர்மயோகி ஒருவன் ஒய்வு ஒழிச்சல் இல்லாது உலக நன்மைககாக இடையறாது வினைபுரிகின்றான். சாதாரண உலகத்தவர் புரிவதைவிட அவன் பன்மடங்கு வினையாற்றுகின்றான். ஆனால் ஒரு வேறுபாடு. உலகத்தவர் எந்தக் காரியம் செய்தாலும பலனில் பறறுக்கொண்டு படப்படப்புடனும் பதைபதைப்புடனும் வினைபுரிவர். ஆனால் கர்மயோகி செய்வதனைத்தும் "கிருஷ்ணார்ப்பணம்" என்ற பாவனையில் சித்தத்தை ஈசன்பால் வைத்து, கரங்களைக் கர்மத்தில் ஈடுபடுத்துகிறான. அப்பொழுது அவன் செயயும் கர்மங்கள் பிறா எதிர்பார்ப்பதைவிட பனமடங்கு நேர்ததியாய் நடைபெறுகின்றன.

அத்தகையவனிடம் மன அடக்கமும், ஆசை அற்றவனாகவுமிருப்பான். சிந்தை சிதறச் சிதற செயலில் ஊக்கமும் திறமையும் குறையும். எண்ணம் ஒருமைப்பட்டால் செயல திறனும் அதிகரிக்கும். நமது அன்றாட வாழ்விலேயே நாம் இதை உணரலாம். பாலத்தில் ஒரு புறத்தில் நீர் வந்து மறுபுறத்தில் அது பாய்ந்து சென்று விழுவது போல யோகியின் மூலம் எணணங்கள் வந்து போகின்றன. எத்தகைய எண்ணங்களானாலும் அவை அவனிடத்து நிரந்தரப் பதிவை ஏற்படுத்தமாட்டா. உலகோர் பொருள் மற்றும் பொனனின் பின்னர் பேயாய் அலைந்து கொண்டிருக்கையில் யோகி அவற்றை வெறுமனே சாட்சி மாத்திரமாகப் பார்த்துக் கொண்டிருப்பான். சிந்தையை அடக்கும் சீரிய கலையில் அவன் தேர்ச்சி பெற்றவன். இத்தகைய உயரிய மன நிலை மூலம் அவன் வினை கடந்த பெரு நிலை அதாவது நைஷ்கர்ம்ய ஸித்தி என்ற நிலையை அடைந்தவனாகிறான.

ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம
ததாப்நோதி நிபோத மே |
ஸமாஸேனைவ கௌந்தேய
நிஷ்டா ஞானஸ்ய யா பரா || (18-50)

பேராசிரியர் டி. கே. நாராயணன்
MSc, M Phil
ஆசிரியர் 'சமயஜோதி' மதுரை.

'குநதியின் புதல்வனே! ஸித்தி அடைந்தவன் ஞானத்தின் உயர்நிலையாகிய பிரம்மத்தை எப்படி எய்துகிறான என்பதைச் சுருக்கமாக என்னிடம் அறிந்து கொள்.'

'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்' என்ற குறளின் வாக்கினை கீதையும் பல இடங்களில் பலவாறாக எடுத்துக் கூறுகிறது. 'ஸித்தி' என்ற வார்த்தை 'பக்குவம்' என்ற கருத்தில் ஈண்டு பயன்படுத்தப்படுகிறது. 'ஸித்தி அடைந்தவன் ஞானத்தின் உயர்நிலையாகிய பிரம்மத்தை அடைகிறான்' என்ற பக

வானது கூற்றிறகு மனத்தில் உளள அனைத்து மாசுக்களையும் அறவே அகறறிப் பககுவமடைநதவன பிரம்மமாகிறுன எனபது பொருளாகின்றது.

இயற்கையில நாம் பெறும் அனுபவங்கள் நம்மை ஓயாது பணபடுததிக்கொணடிருக்கினறன. பூமியின் அடியில் எங்கோ ஆழப் புதைநது கிடக்கும் கரி நாளடைவில் பணபடுததப்பட்டு வைரமாக மாறுகிறது. அது பின்னர் ஆபரணமாக மாறி நம்மவர் காதுகளையும கழுததையும் அலங்கரிக்கிறது. அதன அததகைய அழகின் பின்ஞல் ஆயிரமாயிரம் ஆணடுகள அது பெறற பக்குவத்தை நாம் பொதுவாக நினைத்துப் பாாப்பதில்லை. அதனுடைய "ஸிததி" அது. இநத உதாரணததை நாம ஒவ்வொரு நிகழ்ச்சியிலும பொருத்திப் பார்கக வேணடும. உண்மை புலப்படும்.

மறற உயிாகளின் 'பககுவம்' அலலது 'ஸித்தி' அவற்றில ஸதூல வடிவததுடன அதாவது உடலுடன முற்றுப்பெற்று விடுகிறது. ஆனுல் மனிதனது ஸிததி அவனது மனத்தளவில அமைகிறது. அதுதான மறற உயிர்களுக்கும் மனிதனுககுமிடையில் உளள வேறுபாடாகும. ஒவ்வொரு பிறவியிலும அவனவன செயலகளுக்கேறப சிந்தனைக்கேறப ஒவவொரு மனிதனும் மெனமேலும் பககுவம் அடைகிறுன. எலலா யோக சாதனைகளும 'சித்திவிருததி நிரோதம்' அதாவது 'அலையும் மனததை அடககுதல' எனற மனபபககுவததையே ஆதாரமாகக் கொணடுள்ளன. தூய மனததை உடையவனே ஸித்தன. மனததினில் எநதவித மாசும அற்றவன் பிரம்மத்துக்கு நிகர். அது எப்படி நிகழுமென்பதன விளக்கம் அடுத்த மூன்று சுலோகங்களில் வருகிறது.

புதயா விசுததயா யுகதோ
தருத்யாதமானம் நியம்ய ச |
சப்தாதீன் விஷயான்ஸத யகத்வா
ராகதவேஷௌ வ்யுதஸய ச ‖ (18-51)

'தூய அறிவுடன் கூடியவன் உறுதியுடன தனனை அடககியும், சப்தம முதலான இநதிரிய விஷயங்களைத் துறநதும விருபபு வெறுப்பை விட்டொழித்தும்'.

விவிகதஸேவீ லகவாசீ
யதவாக்காய மானஸ: |
தயான யோகபரோ நித்யம
வைராகயம ஸமுபாச்ரித. ‖ (18-52)

'தனித்திருந்து, உண்டி சுருங்கி மனம மொழி மெய்யை அடக்கி, யாணடும தியானயோகத்தில் திளைத்திருந்து, வைராக்கியம் பூண்டவனுய'

அஹங்காரம பலம் தர்ப்பம
காமம க்ரோதம் பரிக்ரஹம் |
விமுச்ய நிர்மம; சாநதோ
ப்ரஹம பூயாய கலபதே ‖ (18-53)

'அஹங்காரம, வணமை, செருக்கு காமம், கோபம் உடைமை ஆகியவைகளை நீதது மமகாரமற்று சாந்தமாயிருபபவன பிரமமமாவதறகுத் தகுந்தவன'.

சாதாரண மனிதன தெய்வமாக முடியுமா எனற கேள்விக்குரிய பதில் இநத சுலோகங்களில நமக்குக் கிடைக்கிறது.

(தொடரும்)



## பிரமபுத்திராவின் புண்ணியம்

தந்தை இட்ட ஆணையைத் தலைமேறகொண்டு பரசுராமர் தன தாய் ரேணுகாதேவியை கோடாலி கொணடு கொனறு முடித்தார் அல்லவா? பெண பாவம்—தாய் பாவம தவறுமா? கையில் பிடித்த கோடாலியைக் கீழே வைகக முடியவில்லை. உடும்பு மாதிரி உறுதியாய் கையைப் பற்றிக் கொணடது. பரசுராமருக்குப் பாதை புரியவில்லை. அங்கும் இஙகும அலைந்தாா. முடிவில் பிரமபுத்திரா நதிக கரையை அடைந்து பிரசசினைக்குத தீாவு கணடார். அழுததமான நம பிக்கையுடன ஆற்றில் இறஙகினுர். முழு வேகத்துடன் மூழ்கி எழுநதார். புறத்திலிருந்த கோடாலி சரிநதது. அகததிலிருந்த பாவம் கரைந்தது. பிரமபுததிராவின புணணியம் அது.

திருக்கோவலூர் — ஆா. சுபபராவ்

## துயில கொளளுமுன பிராாத்தனை

"இறைவா! இனறு இதுவரை நான என மனம, சொல், உடல்-ஆகியவற்ருல் செய்த க்ாரியஙகளனைததையும தஙகளுக்கு அர்ப்பணிக்கிறேன. இக்காரியங்கள் அனைத்தையும் என் உடலிலிருந்து செயவித்தவர் தாங்களதானே! எனனை மீணடும் ஸுஷுபதி என்னும் உறக்க நிலைக்கு அழைத்துச் செல்வீராக"!

— மயூரப்ரியா.

# நாலாயிரமும் திருவேங்கடமும்

நாலாயிர திவ்வியப் பிரபந்தம தென் நாட்டில் வைணவப் பெரு மக்களால் பெரிதும் போற்றப்படும சிறநத பக்திப் பனுவல. திருமால திருவருளால் மயர்வற மதிநலம அருளப் பெற்ற ஆழ்வாரகள் அருள் மிக்குப் பாடிய இன் தமிழ்ப் பாககளைக் கொண்டது. இதனுள் திகழும் பாசுரங்கள் ஒவ்வொன்றும் செவிககினிய செஞ்சொல்லாலாயது, சொற்சுவை பொருட்சுவைகளில் சிறந்தது. பிறவித்துயரறுத்து அநதமிழ்ப் பேரின் பத்தை அளிக்கவல்லது. இவ்வாற்ருன் ஒவ்வொரு பாசுரமும் ஒவ்வொரு நூல் எனனத்தக்க மாட்சிமையுற்று 'நாலாயிர திவ்வியப் பிரபந்தம்' என்று வழங்கலாயிற்று. இவ்வரிய நூல் ஆழ்வார் அருளிச் செயல், திவ்வியப் பிரபந்தம், ஸ்ரீகோசம் என்றும் வழங்கப்படும். இது மக்களின கீழ்மையை அகற்றி மேன்னமயளிக்கும் மறையாய் விளஙகுதலின் இதனைத தென்மொழி மறை என்பர் சான்ருேர். வடமொழி மறையினும் இது சிறபபுடைய தென்பர். வட மொழி மறை பகவானுடைய அனநத கல்யாண குணங்களைப (Auspicious Qualities) பேசத தொடங்கி அக குணங்களை முற்றிலும் சொல்ல முடியாமல மீணடது என்பர்; நம் தமிழ் மறையே 'உயர்வற உயர்நல முடையவன்' (திருவாய1.1·1) என்று அப்பெருமானுடைய கல்யாண குணங்களை முதலடியிலேயே பேசத் தொடங்கித் தெளிவாகக் கூறியுள்ளது. 'பக்திப் பனுவல்' என்ற நூல் வகையில் இதனைப் போனற பெருமையுடைய நூல்கள் இலக்கிய உலகில் மிகச் சிலவற்றைத்தான் சொல்ல முடியும்.

பேராசிரியர், டாக்டர். ந. சுப்புரெட்டியார்,
சென்னை-40

இநதப் பக்திப் பனுவலில் பொய்கையாழ்வார், பூதத்தாழவார், பேயாழவார் என்ற முதலாழ்வார்கள மூவரும்; பெரியாழவார், அவா அருமைத் திருமகள் ஆணடாளும்; குலசேகராழ்வார், திருமழிசையாழ்வார், தொணடரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வாா, மதுர கவியாழவார், திருமங்கையாழ்வார், நம்மாழவார் ஆகியோரும் ஆகிய பன னிருவர் அருளிச் செய்த இருபத்து மூன்று பிரபந்தங்களும் திருவரஙகத் தமுதனர் இராமாநுசர்மீது பாடியருளிய 'இராமாநுச நூற்றநதாதி' எனற ஒரு பிரபநதமுமாக இருபத்து நானகு பிரபநதங்கள் அடங்கியுள்ளன. ஆணடாள் அரங்கநாதனுடன் ஐக்கியமானபடியால் அவளையும், மாதவனைப் பாடாமல் மானிடரைப் (நம்மாழ்வார்) பாடிய மதுர கவிகளையும் ஆழ்வார்களுடன சேர்க்காமல் ஆழ்வாரகளைப் 'பதின்மர்' என்று பேசும் ஸ்ரீ வைணவ சமபிரதாயமும உணடு. நெஞசை நோககிக் கூறும பாடல் ஒன்றில் முத்தமிழ்க் கவி வீரராகவ முதலியாா, ஆழ்வார்களைப் "பதினமா" என்று கூறுவதும், அவர்களின் அருளிச் செயலகளைப் 'பதின்மர் செந்தமிழ்' என்று வழஙகுவதும் இசசமபிரதாயததை நோக்கியே எனறு கருதலாம்.

"பதின்மர்செநதமிழைநீ படிககிலாய் கேளாய்
படித்தபேர் தாளையும பணியாய்"
(திருவேங்கடககலம்பகம் 24)

என்பது அவர் வாக்கு. திவ்வியப் பிரபந்தத்திலுள்ள பாசுரங்கள் யாவும 108 திவ்விய தேசங்களில் அர்ச்சாவதாரமாக எழுந்தருளியுள்ள எமபெருமானகளைப்பற்றியனவாகும். இப்பாசுரங்களின் பெருமையை வேதாந்த தேசிகர்,

செய்யதமிழ் மாலைகள்நாம்
தெளிய வோதித்
தெளியாத மறைநிலங்கள்
தெளிகின்றோமே, (தே. பி. 40)

(தெளியாத-விளங்காமலிருந்த; மறை நிலங்கள்-வேதப பகுதிகள்)

என்று சிறப்பிததுப் பேசுவர். இவற்றை நாம் பொருளுடன் குரு முகமாகப் பெற்றால் இதுவரை நமக்கு விளங்காமலிருந்த வேத விழுப் பொருளையெல்லாம் நன்கு அறிய முடியும் என்று அறுதியிடுவர் இந்தச் சுவாமி அவர்கள்.

**நாதமுனிகள் அடைவுபடுத்தியது :**

ஆழ்வார்கள் வீடு பேறு பெற்று நெடுங்காலமான பிறகு கால வெள்ளத்தாலும் போற்றுவாரின்மையாலும் எப்படியோ மறைந்து போன இபபாசுரங்களை நாதமுனிகள் என்ற வைணவப் பெரியார் அரும்பாடு பட்டுத் திரட்டி (சுவையான வரலாறு இதுபற்றி உண்டு) வேத வியாசர் வேதஙகளை நான்காக வகுத்துத் தொகுத்ததுபோல், நாதமுனிகளும் இபபாசுரஙகளை நான்கு தொகுதிகளாககி ஒவ்வொரு தொகுதியிலும் கிட்டத்தட்ட ஆயிரம பாசுரங்கள் அடங்கியிருக்குமாறு அடைவுபடுத்தினர். பாசுரங்களை அவர் 'இசைப்பா' 'இயறபா' எனப் பிரித்து இசைப் பாககளை மூனறு தொகுதிகளாகவும், இயற்பாககளை ஒரு தொகுதியாகவும் அடைவுபடுத்தி வெளியிட்டார். இத் தொகுதிகள் வருமாறு:

வானது

முதலாயிரம் :

இதில் அடங்கிய பிரபந்தங்களும அவற்றிலடங்கிய பாசுரங்களின் தொகையும்.

1. பெரியாழ்வார் திருமொழி 473; 2. திருப்பாவை 30; 3. நாச்சியார் திருமொழி 143, 4. பெருமாள திருமொழி 105; 5. திருச்சந்தவிருத்தம 120; 6. திருமாலை 45; 7. திருப்பள்ளி எழுசசி 10; 8. அமலனுதிபிரான் 10; 9 கணணிநுண் சிறுததாம்பு 11. ஆக, பிரபநதஙகள 9க்குப பாசுரங்கள் 947.

இவற்றுள பெரியாழ்வார் திருமொழியிலுள்ள 'திருப்பால்லாணடைத்' தனிப் பிரபந்தமாகக கருதும மரபும உண்டு. 1 எணணுள்ளது பெரியாழவாராலும்; 2, 3 எணகளுள ளவை ஆணடாளாலும; 4 எணணுள்ளது குலசேகராழ்வாராலும், 5 எண்ணுள்ளது திருமழிசைப்பிரானுலும்; 6, 7 எணணுள்ளவை தொணடரடிப்பொடிகளாலும்; 8 எண்ணுள்ளது திருப்பாணுழ்வார்ாலும், 9 எணணுள்ளது மதுரகவிகளாலும அருளிச் செய்யப் பெற்றவை.

2 பெரிய திருமொழி :

இதில அடங்கிய பிரபநதங்களும பாசுரத தொகையும் 10. பெரிய திருமொழி 1084; 11. திருககுறுநதாண்டகம 20, 12. திருநெடுந்தாணடகம் 30. இம்மூன்று பிரபந்தங்களும திருமஙகையாழவாரால் அருளிச செய்யப பெறறவை, அடங்கிய பாசுரஙகள் 1134.

3. திருவாய மொழி ·

இதில் அடஙகிய பிரபநதமும் பாசுரத்தொகையும்.13. திருவாய்மொழி 1102. இப்பிரபநதம் நம்மாழ்வாரால் அருளிச செயயப் பெறறதாகும்.

ஆ. இயற்பாத் தொகுதி .

4. இயற்பா :

இதிலடங்கிய பிரபநதஙகளும் பாசுரத தொகையும். 14. முதல திருவந்தாதி 100; 15. இரணடாம் திருவந்தாதி 100, 16. மூன்றும திருவநதாதி 100; 17. நான்முகன திருவந்தாதி 96; 18. திருவிருத்தம் 100; 19. திருவாசிரியம் 7; 20. பெரிய திருவந்தாதி 87, 21. திருவெழுக்கூறறிருககை 1, 22. சிறிய திருமடல் 1; 23. பெரிய திருமடல 1; 24. இராமாநுச நூற்றந்தாதி 108, ஆக, பிரபந்தங்கள் 11க்குப பாசுரங்கள் 701.

இவற்றுள் 14, 15, 16 எணணுள்ளவை முறையே பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியோராலும், 17 எணணுளளது திருமழிசைப்பிரானுலும, 18, 19, 20 எணணுள்ளவை திருமங்கையாழ்வாராலும்; 24 எணணுளளது திருவரஙகத்து அமுதனுராலும அருளிச் செய்யப் பெற்றவையாகும.

தொகுதி பற்றிய குறிபபு ·

இவண் கூறப்பெற்ற முதலாயிரம் பெரிய திருவாய்மொழி, இயறபா என்ற பாகுபாடும், பிரபந்தஙகளின் அமைப்பு முறையும் நாதமுனிகள் காலத்தில் ஏற்பட்டவையாகும. பிரபநதங்களின் எணணிக்கை இத்தனை என்பது நாதமுனிகள் காலத்து வழஙகி வநததாகத தெரியவில்லை. திருவரஙகததமுதனுா இராமாநுசா மீது அருளியுள்ள 'இராமாநுச நூறறந்தாதி' இராமாநுசா காலததில் இயற்பாததொகுதியுடன 24-ஆவது பிரபந்தமாகச சேர்ககப் பெற்றது. அக்காலத்திலிருந்து முதலாயிரத்திலுள்ள கணணிநுண சிறுததாமபைப போலவே, இயற்பா இறுதியிலுள்ள 'இராமாநுச நூற்றநதாதி' எங்கணும பெருவழககாக ஓதப் பெறறு வருகினறது. இன்றுள்ள திவ்வியப பிரபந்தத்தின் பிரபந்தஙகளின தொகையும பாசுரஙகளின தொகையும் வேதாந்த தேசிகர் காலத்தில வரையறுத்துக் கூறப் பெற்றவையாகும். தேசிகர் திருபபல்லாணடைத் தனிப் பிரபநதமாகக கொள்ளவில்லை.

பிரபநத வகைகள :

அநதமிழால நற்கலைகள் ஆய்நதுரைத்த திவவியப் பிரபநதஙகள் இருபத்து நானகில 1. முதற் குறிப்பால பெயா பெறறவை அமலனுதிபிரான, கணணிநுண சிறுத்தாமபு ஆகிய(2)2. அந்தாதித தொடையாய் பெயா பெறறவை முதல திருவநதாதி இரண்டாம திருவநதாதி, மூன்றும திருவந்தாதி, பெரிய திருவநதாதி ஆகிய(4)3.முதற குறிபபாலும் அநதாதித் தொடையாலும பெயர் பெறறது நான்முகன் திருவந்தாதி(1) 4. பாடியவாகளால பெயா பெறறவை பெரியாழவாா திருமொழி, நாயசசியாா திருமொழி, பெருமாள திருமொழி ஆகிய (3) 5. அளவால் பெயா பெறறவை பெரிய திருமொழி, திருவெழு கூற்றிருக்கை (2) 6. பாடியவர் பெயராலும் அநதாதித் தொடையாலும பெயர் பெற்றது இராமாநுச நூற்றநதாதி (1) 7. பாவால பெயர் பெற்றவை திருவாசிரியம, திருசசநத விருத்தம் ஆகிய (2) 8. செயலால பெயர் பெற்றவை திருப்பாவை, திருப்பளளி எழுசசி ஆகிய (2) 9. தனமையால பெயா பெறறவை திருவிருததம், திருக்குறுநதாணடகம், திருநெடுநதாணடகம, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருமாலை ஆகிய (6) 10. சிறபபால் பெயா பெறறது திருவாய் மொழி (1.)

திருவேஙகடததின்மீது மஙகளாசாசனம

108 திருப்பதிகளுள கோயில், திருமலை, பெருமாள் கோயில் (காஞசி) என்ற மூனறும வைணவப் பெருமக்களால் மிகவும் சிறப்பாகப் போற்றப் பெறுவன. நம்மாழ்வாரின் முதற் பிரபநதமான திருவிருத்தத்தில் திருவரங்கம், திருவெஃகா, திருவேங்கடம் என்ற மூனறு திருப்பதிகளின்

பெயர்கள் மட்டிலும் வருவதால் (பாசுரம 28, 26, 31) இவை இச சிறப்புப பெயாகள பெறறதாகப் பெரியோா பணிபபர் இநத மூனறு திவ்விய தேசங்களுள திருமலை (திரு வேஙகடம்) நடு நாயகமாகத திகழ் வது, வடநாட்டுத் திருபபதிகள் பனனிரணடனுள முதலாகக கூறப் பெறுவது. இதனைத திவவிய கவி,

தானே சரணமுமாயத் தானே பலமு
மாயத
தானே குறைமுடிக்குந தன்மையான-
தேனேய்
திருவேங் கடநதெழுதேந நீய
விபூதிக்குள்
கருவேம கடநதனெமிவ் வாழவு.
(நூற திருப. அந்தாதி-96)

[சரணம்-உபாயம; பலம்-உபேயம்; தேன்ஓய-தேன நிறைநத, தியவிபூதி- லீலா விபூதி; மருவேம்-பொருந்தேம] எனறு சிறப்பித்துப் பாடுவா. வேதாநத தேசிகரும,

கண்ணனடி யிணையெமக்குக காட்டும
வெறபு;
கடுவினையர் இருவரையும கடியும
வெறபு;
திண்ணமிது வீடெனனத் திகழும
வெறபு;
தெளிந்தபெருந் தீாத்தஙகள
செறிந்த வெறபு;
புணணியத்தின புகல்இது எனப
புகழும் வெறபு;
பொனனுலகிற போகமெலாம
புணாககும வெறபு;
விணணவரும மண்ணவரும் விரும
பும வெறபு;
வேங்கடவெற்பு எனவிளங்கும
வேத வெறபே.
(தே. பி. 82)

[குடியும் - ஒழிககும்; திணணம்- உறுதி; செறிநத-நிறைநத; புகல்- இருப்பிடம்; பொன உலகு - பரம பதம, புணர்ககும்-அடைவிககும.] என்று போறறிப் புகழ்வர்

இத்தகைய பெருமை வாய்நத திரு வேஙகடத்தைப் பறறிய பாசுரங்கள் 213 திவவியப பிரபநதததில் உள் ளன. இவற்றைப் பாடியவர்கள் பதின்மா; பத்து ஆழ்வார்கள் எந் தெந்த ஆழ்வாாகள் எத்தனை எத் தனைப பாசுரஙகள் அருளியுளளனர் எனபதன விவரம

| | | |
|---|---|---|
| 1 | பொயகையாழவார் | 10 பாசுரம |
| 2. | பூததததாழ்வாா | 9 ,, |
| 3. | பேயாழவாா | 19 ,, |
| 4. | திருமழிசையாழவாா | 15 ,, |
| 5. | திருபபாணுழவார் | 2 ,, |
| 6. | குலசேகராழவாா | 11 ,, |
| 7. | பெரியாழவாா | 7 ,, |
| 8. | ஆணடாள | 16 ,, |
| 9. | திருமஙகையாழ்வாா | 62 ,, |
| 10. | நமமாழ்வாா | 62 ,, |
| | மொத்தம் | 213 |

திருவேங்கடததைப் பற்றியும் அஙகு எழுநதருளியிருககும் நெடி யோனைப் பறறியும் ஆழவார்கள் பெறற அநுபவததை நாமும் பெற முயல்வது நம் கடமையாகும். இம் முயறசியில் ஈடுபடுவதற்கு முன்னர் வைணவததத்துவததைப்பறறிய ஒரு சிறு குறிபபினை மனத்திலிருத்த வேண டும. வைணவத தததுவம் சித்து, அசித்து, ஈசுவரன என்று மூவகைப் பட்டிருக்கும. இதனைத 'தத்துவத் திரயம்' (திரயம் மூனறு) எனறு வழங்குவா வைணவப் பெருமக்கள. சிததும அசித்தும ஈசுவரனுக்கு உட லாக அமைந்திருக்கும இந்த உறவினை 'சரீர-சரீரி பாவனை' எனறு போறறி யுரைபபர் அப்பெருமக்கள். அசிததும் எமபெருமான படைப்பாதலால், அது வும வழிபாடடிறகுரியது.

செனறு சோதிரு வேஙகட மாமலை
ஒனறு மேதொழ நமவினை ஓயுமே.
(திருவாய 3,3:8)

என்ற நமமாழவார் பாசுரம் இக கருததிற்கு அரண செய்வதாக அமை கினறது. அசித்தின் பெயரைச் சொன்னவுடனேயே எமபெருமான மன மகிழநது நமக்குத் திருவருள் பாலிககும் பெருமை பேசப்படு கினறது.

திருமா
மலைனமே ரிமை
திருமால வநதுளள
நெஞ்சுநிறையப புகுந
(திருவாய 1ட.

எனற திருவாய் மொழிப் பாசுரம் இதற்குச சானருக நிற்கின்றது. திரு வேஙகட மாமலை பறறிய நமமாழ் வாரின,

'அகலகிலலேன இறையும' எனறு
அலர்மேல மஙகை உறைமாாபா!
நிகாஇல புகழாய' உலகமமூன்று
உடையாய எனனை ஆளவானே!
நிகர்இல அமரா முனிககணஙகள
விருமபும் திருவேஙகடததானே!
புகலஒனறு இலலா அடியேனஉன்
அடிககீழ அமாநது புகுநதேனே.
(திருவாய் 6.10:10)

எனற பாசுரம சரணுகதித தத்து வததை விளககுவதாக அமைகினறது. இதில், 'நிகரில் புகழாய' என்பதனுல் வாதசல்யம் என்னும் குணத்தையும், 'உலகம் மூனறு உடையாய' எனப தனுல் சுவாமித்துவம் எனனும் குணத் தையும 'எனனை ஆழவானே' என் பதனுல் சௌசீல்ய என்னும் குணத் தையும 'திருவேங்கடத்தானே' என் பதனுல் சௌலப்பியம என்னும் குணத்தையும தெரிவிப்பதாகப் பெரி யோர் பணிபபா. பிராட்டியின் புருஷ கார பலததாலே ஈசுவரனுடைய சுதந்திரத் தன்மை மாய்நது இந்த நானகு குணங்களும் தலை எடுககின றன. இநத நானகையும பறறுசாகக் கொணடு சேதநன ஈசுவரனைப் பற்று கின்றுன். இநத நான்கு குணங்களுள் சௌலப்பியமே தலை சிறநதது. காரணம், இநதத திருக்குணத்தைத்தான் அர்சாவதாரததில காண முடியும். சௌலப்பியததிறகு எலலை நிலம் அர்ச்சாவதாரமாகையாலும (முமுட் சுப்படி-139) இநத அவதாரத்தைக் கணடு பறறுகைககு எளிதாக இருப் பதனுலும சரணுகதிக்கு இஃது எளி தாக அமைகினறது.



# தருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் உள்ள தி தி. தேவஸ்தானத்தாரின் தங்கு வசதிகளின வாடகைக் கட்டண விவரங்கள்.

| குடில்கள் வகை | வாடகை விவரங்கள் (நாள் ஒன்றிறகு) |
|---|---|
| சிறப்பு வகை குடில்கள | ரூ. 100/- |
| டி. பி. உட்குடில்கள் | 70/- |
| டி. பி. வெளிக்குடிலகள, III-வது வரிசையும சேர்தது | |
| 'ஏ' பகுதி (வெந்நீர் வசதி உள்ளது) | 20/- |
| 'பி' பகுதி (வெந்நீா வசதி இல்லாதது) | 12/- |
| வி. வி. சி. மற்றும் எம். பி. சி. 31 மற்றும 26 | 70/- |
| எம். பி. சி. 'ஏ' பகுதி (வெநநீர் வசதியுடன்) | 20/- |
| எம். பி. சி. 'பி' பகுதி (வெந்நீர் வசதி இல்லாதது) | 12/- |
| டி. பி. அறைத்தொகுதிகள் மற்றும் ஏ. டி. சி. அறைத தொகுதிகள் | |
| வெந்நீர் வசதியுடன | 15/- |
| வெந்நீர் வசதி இல்லாதது | 10/- |
| ஏ. டி. சி. கீழ்த்தளம | |
| 'ஏ' பகுதி | 30/- |
| 'பி' பகுதி | 30/- |
| எஸ். எம், சி.; எஸ. என். சி.; ஏ. என். சி.; ஜி. என். சி.; எச். வி. சி. | |
| 'ஏ' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| 'பி' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| எச் வி. டி, சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதியுடன் | 25/- |
| எச. வி. டி. சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெநநீர் வசதி இல்லாதது | 12/- |
| பெரிய அறைததொகுதியுடன் கூடிய எச். வி. சி. விருநதினா விடுதி — வெநநீர் வசதியுடன | 50/- |
| சிறிய அறைத்தொகுதியுடன் கூடிய எச. வி. சி. விருந்தினா விடுதி வெநநீா வசதி இல்லாதது | 25/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி பெரிய அறைத்தொகுதி (வெந்நீர் வசதியுடன) | 70/- |
| எஸ். வி. விருந்தினா விடுதி மூலை அறைத்தொகுதி | 60/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றைய அறைததொகுதி | 50/- |
| **என். ஜி. விருந்தினா விடுதி I & II** | |
| மூலை அறைத்தொகுதி | 60/- |
| மற்றைய அறைததொகுதிகள | 50/- |
| எச ஆா. ஜி. முழு குடில் | 250/- |
| **எஸ. வி. விருந்தினர் விடுதி** | |
| பெரிய அறைத்தொகுதி எண; 9 மறறும சிறிய அறைத்தொகுதி எண்: 7 மற்றும 8 | 750/- |
| பெரிய அறைத்தொகுதி எண்: 1 மற்றும் சிறிய அறைததொகுதி எண்: 6 | 750/- |
| சிறிய அறைத்தொகுதிகள் எண்· 2, 3, 4, 5, (ஒவ்வொன்றும்) | 250/- |
| ஸ்ரீநிகேதன் (ஒவ்வொரு அறைத்தொகுதி) (எஸ். பி. நகர் விருநதினர் விடுதி எண்: 4) | 250/- |
| இந்திரா விருநதினர் விடுதி (ஏ. சி.) ஒவ்வொரு அறைததொகுதி (எஸ. பீ. நகா விருந்தினர் விடுதி எண 2) | 250/- |
| பாலகுடீரம் (ஏ.சி.) ஒவ்வொரு அறைத்தொகுதி (எஸ. பி. நகர் விருந்தினா விடுதி எண· 3) | 250/- |
| கோகுலம் (ஏ. சி.) | 500/- |
| டி. பி. சி. மறறும் ஏ. டி சி. குடில்களில் முதல்தளம் முழுப்பகுதி | 60/- |
| அரைப்பகுதி | 30/- |
| எஸ். என. விருந்தினா விடுதி (அறைததொகுதி ஒனறிற்கு) | 50/- |
| ராம பகீச்சா விருந்தினா விடுதி (அறைத்தொகுதி ஒனறிற்கு) | 50/- |
| **திருமணக்கூடஙகள்** | |
| எஸ எம சி 260, 266, 267, 272. ஒவ்வொரு குடிலுககும நாள ஒனறிறகு | 75/- |
| ரூயா 248 | 100/- |
| கோகினேனி 226 | 100/- |
| சிதம்பரம செட்டியாா குடில் | 125/- |
| ஏ டி. சி. 99 | 100/- |
| டி. பி. சி. 71, 136, 152 | 75/- |
| பாலாஜி திருமண மணடபம | 500/- |
| சீதாராம திருமண மண்டபம் | 1000/- |

# ஸ்ரீ இராம நாம தாரகம்

தாரகம் என்றால் கரையேற்றுவது என்று பொருள். உலகத்து உயிர்களைக் கரையேற்றுவது. இராமனுக்கும் மூத்தது இராம நாமம். ஜீவராசிகளை ஜபிக்கச் செய்து சக்தியையும், புத்தியையும் அளிக்கும் ஜகத் காரணனை பரப்ருஹ்மத்திற்கு இராமன் என்ற நாமம் உண்டு என்று உபநிடதங்கள் கூறும் பரம்பொருளின் உடபொருளான அழியா அழகுடையவன் என்ற கருத்துள்ள இராம நாமத்தை வசிஷ்டர் தசரத குமாரனுக்குச் சூட்டினர். எத்தனையோ கோடி நாமாக்கள் இருப்பினும் 'நாம கரணம் ததாகரோத' என்று வால்மீகி கூறுவதுபோல இராம நாமம் தாஸரதிக்கு வைக்கப் பட்டது. தாரக நாமத்தைப் பற்றி சாரதா திலகம் என்னும் மந்த்ர சாஸ்த்ரம் கூறும்போது 'ராமாக்யம் ப்ரோச்யதே பதரம் தாரகம் மதுவத் ஹிதம்' என்று கூறுகிறது. இதில் 'ஒரு வியாதியஸ்தனுக்கு மருந்தே தேனால் எப்படியோ அவ்விதம் ஸம்ஸார மனோ வியாதியான கவலையால் பீடித்த நமக்கு தேனே மருந்தாவது போல 'இராம' எனும் மந்த்ரம் அமைகிறது' என்கிறார்.

வாழ்நாள் முழுவதும் பாபம் செய்து நாம் மரிக்கும் போதாவது இராம நாமத்தை ஜபித்தால் தாரகமாகிய அது நம்மை கரையேற்றும் என்று சதாசிவ ப்ரும்மேந்திரர் கூறுகிறார். துளசிதாஸர் 'பிதற்றி பிதற்றி காலங்களை வீணாக்கி இறுமாப்படையும் பித்தர்களாகிய ஜீவன்களே! போனது போகட்டும்! கவலையை விட்டு ஒழியுங்கள்! நீங்கள் உய்ய ஒரே வழி இராம நாமம்' என்கிறார்.

இந்த இராம நாமத்தை 96 கோடி முறை ஜபித்து இராமனை நேரில் கண்ட சத்குரு தியாக ப்ரும்மம் வால்மீகியின் அவதாரமே. இவர் 'தாரக நாமமு', 'சுகியெவரோ' என்ற கீர்த்தனைகளில் முற்பிறவி பாக்யம் உள்ள ஜீவன்களுக்கே இராம நாம ஜபம் இப்பிறவியில் வாய்க்கும் என்கிறார்.

ஸ்ரீவித்யா மந்த்ரம், அஷ்டாக்ஷரம் பஞ்சாக்ஷரம், காயத்ரி முதலிய மந்திரங்களின் சாரம்தான் இராம நாமம். சைவ, வைணவ, மாத்வ சம்பிரதாயத்தினரை ஒன்று படுத்தி அபேதானந்தத்தை அளிப்பது தாரக நாமம்.

காயத்ரி மகா மந்திரத்திற்கு ரிஷி விஸ்வாமித்திரர். இவர் எல்லா மந்திரங்களும் கைவரப் பெற்றவர். ஆனால் அவை எவையும் அவரை காமம், குரோதம் லோபம், மோகம் முதலிய கெட்ட குணங்களிலிருந்து கரையேற்றவில்லை. அவர் உபாஸித்த காயத்ரி மந்திரத்தின் தாயாகிய காயத்ரி தேவி அவர் மனதிற்குள் புகுந்து 'பரப்ரும்மமே இராமன் வடிவில் தசரத குமாரனாக பிறந்திருக்கிறது. எனவே அயோதிக்குச் சென்று அதை அடைவாயாக' என்று ஆக்ஞாபிக்கவே தசரதனிடம் வந்து இராமனை அழைத்துச் செல்கிறார். தான் கற்ற வித்தைகள், மந்திரங்கள் அனைத்தையும் பரப்ரும்மமான இராமனுக்கு அர்ப்பணித்து விட்டுப் பதிலுக்கு இராமநாமத்தை மட்டும் தனக்குரியதாகப் பெறுகிறார் இராமனுக்கு மணம் செய்து விட்டு தாரகத்தை ஜபிக்கவே ஹிமயமலைக்குத் தனித்துச் செல்கிறார் என்று இராமாயண பாஷ்யகாரர்களில் ஒருவரான மகேஷ்வர தீர்த்தர் கூறுகிறார்.

திரு. பி. சுந்தரராமன் M.A. B.Ed.,
பழமார்னேரி

## துயர் துடைத்த திருமஞ்சனம்

உறையூரை ஆண்ட சோழ மன்னன் ஒரு சமயம் திருவானைக்காவல் உறையும் ஜம்புகேசுவரருக்குத் தன் மனைவி அணிந்திருந்த முத்தாரத்தைச் சூட்டி அலங்கரிக்க ஆசைகொண்டு மனைவியுடன் கோயிலுக்குப் புறப்பட்டான். கோயில் அருகில் காவேரியில் அவ்விருவரும் நீராடப் புகுந்தார்கள். அரசியார் நீராடும்போது அவர் கழுத்தில் அணிந்திருந்த முத்தாரம் நதியில் நழுவி நீரில் மூழ்கியது. அரசன் மிகவும் வேதனை அடைந்தான் கோயிலுக்கு விரைந்து சென்று இறைவனை இறைஞ்சி நின்றான். நல்ல நேரம் அது. அப்புலிங்கத்துக்கு அபிஷேகம் நடந்து கொண்டிருந்தது. திருமஞ்சனத்துக்காக காவேரியிலிருந்து கொண்டு வந்த தீர்த்தம் அது. திருமஞ்சனக் குடத்திலிருந்து ஒரு முத்தாரம் இறைவன் திருமுடியில் இறங்கி இயல்பாக அலங்கரித்தது. அரசியார் காவேரியில் தவறிய முத்தாரமே அது. அரசனும் உடன் இருந்தவர்களும் (அக்காட்சியைக் கண்டு) வியந்து நின்றார்கள். இறைவனின் திருவிளையாடலை எண்ணி எண்ணி உள்ளம் பூரித்தார்கள். இந்நிகழ்ச்சியை சுந்தரமூர்த்தி நாயனார் தாம் இயற்றிய தேவாரத்தில் பாடி மகிழ்கிறார்.

திரு. ஆர். சுப்பராவ்—திருக்கோவலூர்.

## எங்களை நீ பாராய்!

பொழுதுகள மலருது! புதுயுகம் புலருது!
தொழுதிடும் கணணோடு அழுதிடும மனதோடு
குழுமிடும பகதர்தம் குறைநீக்கி அருளிடும
எழுமலை நாதனே! எஙகளை நீபாராய்!!

எளிமை ததும்பிடும இயற்கை வரம்போடு
வளமை அரும்பிடும புதுமை வாழ்வோடு
செழுமை சிரித்திடும் பெருமை சிருஙகரிததிடும
திருமலை தேவனே! எஙகளை நீபாராய்!!

சததியதது நெறிதனிலே சநதோசம் நிறைநதிட
எததனிககும உலகினிலே அததனுநதன அருளாலே
திததிககும் அன்பாலே சித்தமெலாம உன்பாலே
எததிககும இறைவனே! எஙகளை நீபாராய்!!

நாடியெலாம 'நாராயணு' 'நாராயணு' எனறுவகக
தேடிவநத ஏழைகளெலாம் தெவிட்டாமல தரிசிகக
கூடிநினற பாமராதம பாவமெலாம பறகக
படியளநதிடும பரமாதமனே! எஙகளை நீபாராய்!!

பூககபூக்க வானமெனும நநதவனம அழகுபூரித்தும
பறிககபறிகக மலரான பாவஙகளால் அாசிததும,
மனனிககிற மாதவனே! பாவிகளை இரட்சிகக
புனனகைககிற பூபாலனே! எஙகளை நீபாராய!!

கலியுகமேகம் கலைநதிட செயதிடும கல்கிவேநதனுய்
நிலவுலகின் நீதிதெய்வமாய தலமான திருபபதியில
அலமேலு மஙகையோடு அருளபுரியும் நினனோடு
நலமாக ஆட்கொளள எஙகளை நீபாராய்!!

குடநதை இரா. லக்ஷ்மிபரியன—திருச்சிராப்பளளி-19.

"ராமேததி மதுராம் வாணீம, விச்வா
மிதரோபய பாஷதா"

எனறு கூறும வால்மீகி அடிககடி தாரகமாகிய இராமநாமத்தையே விசுவாமித்திரா ஜபிததாா எனற கருததைப பெற வைககிறா. இவ்விதமே அகலிகை, சபரி, தாரை, விராதன், கபநதன, மாரீசன முதலிய யாவருககும நனமை விளைவித்தது இராம நாமமே சுநதர காணடம முழுவதும் இராம நாமத்தின் பெருமைதான். இராம நாமம், ஹனுமானை நிமிட நேரத்தில கடலை தாணட வைத்தது. ஆனால அநத இராம நாமததிறகு உரிய இராமனே கடலைத் தாணட தவமிருநது அணை கட்டி அரிதில் முயனறு கடலைக கடநதான. எனவே இராமனைவிட அவன நாமத்திறகுப பெருமை அதிகம. இதை ஹனுமானே சீதையிடம பிறகு கூறுகிறா. கணையாழியை சீதையிடம கொடுக்கும பொழுது,

"இராமநாமஙகிதமிதம பஸய"

'நானே குரஙகு, எனனை இநத பெரிய கடலைத்தாணட வைதத இநத இராம நாமாவுடன கூடிய, இராம நாமம பொறிதத இநத மோதிரததைப பாருங்கள்" என்கிறா்.

வடகோடியில உள்ள காசிககும், தென கோடியில் உளள இராமேஸ்வரத்திற்கும் விசேஷ மகிமை உண்டு என்றால் அது இராம நாம தாரகத்தின் பெருமையே ஆகும். 'வலையில் சிக்கிய மீன் அலலது மான விடுதலை அடைநதாலும் அடையலாம். ஆனால் கவலையில் சிககியவர் விடுதலை அடைய முடியாது. அவர்களையும விடுதலை செயய ஒனறு உணடு என்றால அது தாரகமே'. (தத்பரம் தாரகம் நாம) என்று பரமேசவரனே பார்வதி தேவிக்கு காசியில் உபதேசிததாா.

"ஒளியதான காசிமீதில் வந்து தங்கு
வோா கெலலாம
தெளியதான ஜோதிமேனி விசவனாத
நானவன
தெளிவு மஙகை உடனிருநது செபபு
கின்ற தாரகம
ஒளியதான ராமராம, ராமவெனனும
நாமமே."

எனறு சிததா பாடல கூறுவதின மூலம், காசியில முகதி அடைவோரின வலககாதில பார்வதி உடனுய பரமேச்வரன இராம நாமததை உபதேசித்தே அவாகளுககு முக்தியளிககிறாா் என்ற செயதி புலனாகிறது.

கும்பகோணம் அருகில உள்ள கோவிநதபுரததில மஹா சமாதி அடைநதுள்ள காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஸ்ரீ போதேநதிரா சமாதியில் நிசபதமான இரவு நேரஙகளில இடைவிடாது இராம நாமம ஒலிதது வருகிறது எனறு பல அனுபவஸதாகள் கூறுகினறனா. இவர் ஜீவதசையில இருநதபோது இராம நாமததை உலகெங்கும பரபபினாா்

வசிஷ்டா 'இராமா' எனறும, கௌசலயை 'இராம பதரா' என்றும, தசரதா 'இராமசநதிரா' எனறும, தேவாகள 'வேதமே' எனறும, கோசல தேச மககள 'ரகுநாதா' எனறும, சீதாதேவி 'ஹேநாதா' எனறும், மிதிலை வாசிகள 'சீதாபதி' எனறும் இராமனை அழைதத பாககியசாலிகள். இராமனை வேணடி நாமும பல நலனும பெறுவோமாகுக!

ராமாய ராமபதராய ராமசநதிராய
வேதஸே ||
ரகுநாதாய நாதாய ஸீதாயா
பதயே நம ||

# ஆய்ச்சியர் குரவையில் அவதார மகிமை

'அவதாரம்' என்ற சொல்லுக்கு 'இறங்குதல்' என்று பொருள். உயர்ந்த நிலையிலிருந்து தாழ்ந்த நிலைக்கு வருதல் என்றும் பொருள் கொள்ளலாம். நல்லோரைக் காக்கவும் பொல்லாரை அறவே ஒழிக்கவும் அறத்தை நன்கு நிலை நிறுத்தவும் இறைவனது அவதாரம் நிகழ்கிறது. காலத்தின் இயல்பிற்கும் மனிதனுடைய போக்கிற்கும் ஏற்றவாறு புதிய அற நெறிகளைக் காட்டி மக்களைப் பரம்பொருளிடம் சேர்த்தலும் அவதாரத்தின் நோக்கமாகும்.

இந்து சமயத்தில் முப்பெருங் கடவுளருள் காத்தற் கடவுளாக விளங்கும் திருமால், உயிர்கள் இவ்வுலகத் துன்பத்தினின்று உய்வதற்காகப் பல அவதாரங்கள் எடுத்துள்ளார். உலகத்திலே எவ்வப்பொழுது அறம் தேய்ந்து அல்லவைப் பெருகுகின்றனவோ அப்பொழுதெல்லாம் தன்னைத் தானே இறைவன் படைத்துக் கொள்கிறான். இதனை,

பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம்|
தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ||

எனக் கீதை கூறும்.

'நல்லோரைக் காக்கவும் அல்லோரைக் கரந்தொடுக்குவதற்கும், தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் நான் அவதரிக்கிறேன்' என்பது அதன் பொருள்.

களை தலைநிமிர்ந்து வளர்ந்து பயிர்களை அழிப்பது போன்று நல்லவர்களுக்கிடையே தீயோர்கள் தோன்றி பெருந்துன்பம் விளைவிக்கின்றனர். உலகில் தீயவர்களுடைய கூட்டம் பெருகி விட்டால் அவர்களிடையே தர்மம் நிலைக்காது; மாறாக அதர்மமே நிலைக்கும். எனவே, போர், கொள்ளை நோய், வறுமை, பஞ்சம் இவை வாயிலாகப் பகவான் அவர்களுக்குத் துன்பத்தை யூட்டுகிறார். துன்பம் ஒன்றே மக்களைச் சீர்திருத்துவதற்குச் சிறந்த வழியாகும். மரணத்தின் வாயிலாக அவர்களில் பெரும்பான்மையோரை ஒதுக்கித் தள்ளுதலும் அவசியமாகிறது.

குணங்கள் மூன்று வகைப்படும். அவை இராஜசம், தாமசம், சத்துவம் என்பன. இவற்றுள் இராஜசகுணமும், தாமச குணமும் அதிகரிக்கப் பெறும்போது மக்கள் அதர்மத்தில் ஈடுபடுகின்றனர், அப்போது துன்பம் பெருகுகின்றது. ஆதலால் அவர்களுடைய தொகையைக் குறைத்தல் வேண்டும். சத்துவகுணத்தில் இருப்பவர்களை ஓம்புதல் அடுத்தபடி நிகழ்கின்றது. இங்ஙனம் இம்முக்குணங்களுக்கிடையில் தாரதம்மியம் ஓரளவு சமப்படுவதாகிறது. இதைத்தான் அவதார புருஷர் செய்து வைக்கின்றனர். அவதாரத் புருஷர் வேறு, திருமால் அவதாரம் வேறு.

அவதார புருஷர் ஈசுவரனால் அனுப்பப்படும் மனுஷ்ய தூதர் ஆவர். அவர் பெரிய சக்கரவர்த்தியின் பிரதிநிதி போன்றவர். தொலை தூரத்தில் நடக்கும் கலவரங்களை அடக்கச் சக்கரவர்த்தி செல்ல இயலாதாகையால் தன் பிரதிநிதியை அனுப்பி அமைதியை நிலைநாட்டுவதுபோன்று, எங்குத் தர்மம் தாழ்ந்து அதர்மம் ஓங்குகின்றதோ அங்கு இறைவன் தன் அவதார புருஷனை அனுப்பித் தர்மத்தை நிலை நிறுத்துகின்றார்.

திருமால் அவதாரங்களுள் பத்தே மிகச் சிறந்ததும் யாவரும் போற்றக் கூடியதுமாகும். அதை தசாவதாரம் என்பர். பெரியாழ்வார் அவற்றை,

" தேவுடைய மீனமாய் ஆமையாய்
ஏனமாய் அரியாய் குறளாய்
மூவுருவில் இராமனாய் கண்ணனாய்
கற்கியாய் முடிப்பான் கோயில் "

எனக் கூறுகின்றார்.

இப்பத்து அவதாரங்களும் மனிதப் பரிணாம வளர்ச்சியை விளக்குவனவாய் அமைந்து விளங்குவதாகவும் அறிஞர் கூறுவர். முதலாவது படி நிலையினைத் தாழ்ந்த பிறப்புக்களான மீன், ஆமை, பன்றி முதலியவை விளக்குகின்றன. இரண்டாவது படி நிலையினை விலங்கு முகமும் மனித உருவமும் கலந்த நரசிங்க அவதாரம் விளக்குகின்றது. மூன்றாவது நிலையினை மனித அம்சத்தோடு பிறந்து பழி வாங்கும் கொடிய குணமுடைய அவதாரமாகப் பரசுராம அவதாரம் விளங்குகின்றது. அடுத்தது தூய நற்

---


கோவி. நரசிம்மன் எம்.ஏ.,எம்ஃபில.,
திருப்பதி.


---

பண்புகளின் உறைவிடமாக இராமவதாரம் விளங்குகின்றது. விருப்பு வெறுப்பு இல்லாது தர்மத்தை நிலைநாட்ட அதர்மத்தை அழிப்பதே கிருஷ்ணாவதாரமாகவும், ஒழுங்கின்மையை வெட்டி வீழ்த்தும் வாளொடு தோன்றும் அவதாரமாகக் கல்கி அவதாரமும் விளங்குகின்றன. மனிதத் தன்மை வாயிலாகத் தெய்வாம்சம் வெளிப்படும் சிறப்பினை அவதாரங்களால் அறிய முடிகின்றது. இந்த அவதாரங்களுள் வாமன அவதாரமும் இராம அவதாரமும் கிருஷ்ண அவதாரமும் நரசிங்க அவதாரமும் சிலப்பதிகாரத்தில் சிறப்பாகப் பாடப் பெறுகின்றன.

சிலப்பதிகாரத்தில் பதினேழாவது காதையாக அமைவது ஆய்ச்சியர்

குரவையாகும். இளங்கோவடிகள் திருமாலின் புகழை, தெய்வத்தன மையை விளககுவதற்காகவே இக் காதையை அமைத்தாரெனில் அது மிகையாகாது இதில திருமால குறித்துப் பல கருத்துககள் கூறப் பெற்று இருந்தாலும அவதார மகிமை பறறியே மிகச் சிறபபாகச் சொலலப்பெற்றுள்ளது.

**மூவுலகும ஈரடியான் அளந்தோன்**

பிரகலாதன பேரன் மாபலிச சக்ரவர்த்தி ஆவான சிறநத விஷ்ணு பகதன். பிரமமாவை நோக கித் தவம் புரிநது வரங்கள பெற் ருன். மிகுந்த வரங்கள பெற்ற அகஙகாரததினுல் தேவேநதிரனை அவன பதவியிலிருநது துரததிவிட் டுத் தேவர்களுககுத தலைவனுக விளங்கினுன.

இதையறிநத தேவேந்திரன தந்தை காசிபா திருமாலை நோககித தவஞ் செய்ய, திருமால 'அதிதி கற பத்தில தோன்றி இநதிரனுக்கு மீண டும் அருள் செயகிறேன' எனறு கூறி ஞர். அதனபடி சிறிது காலததிற குப்பின அதிதியின் வயிற்றில் மகா விஷ்ணு தோன்றினுர். உபேந்திரன எனும பெயரில் வளர்நது வரலா ஞா. வாமன குறுகிய வடிவம் உடையவர். அதனுல் குறளன் என ஞெரு பெயரும் உணடு.

மாபலிச் சக்கரவர்த்தி ஒருமுறை விஷ்ணுவைக் குறிதது யாகம் செய்த காலத்தில வாமனர் அஙகுச் சென று தான் தனித்து யாகம் செய்ய மூன றடி மண கேட்டு வேணடினுா. பலிச சக்கரவாத்தி தன குரு சொலலையும மீறித் தானம் வழஙகினுா. உடனே வாமனர் விணணை ஓரடியாலும மணணை இனனோரடியாலும் அளந்து எஞசிய ஓரடியைப பலியின தலையி லும் வைதது அளநது கொணடாா. இதனை இளஙகோ,

"... ......கொண்ட சீா
வைய மளநதானறன" (17:16 2-3)

எனறும்

"இரண்டடியான மூவுலகு மிருடீர
நடந்தனையே"

என்றும (17:34.2)

"மூவுலகு மீரடியான முறைநிரமபா
வகைமுடியத
தாவியசே வடிசேப்ப..." (17.35.1-2)

எனறும் விளக்குகினறுா.

தமபியொடுங் கான போந்தோன

அயோத்தி நகரத்தில் சூரிய வம் சததில் உதித்தவன தசரதன் அவன பிளளை இலலாக குறையால யாகம செயதான். இஃது இங்ஙன மிருகக, இராவணன எனும அசுர னின தொலலைகளைத தாங்கவிய லாத தேவாகள மகாவிஷ்ணுவிடம முறையிட திருமால் அவர்களுககு ஆறுதல் கூறி 'அயோத்தியில தசரத னுககு மைந்தனுகப் பிறநது இராவ ணனை அழிப்பேன' என்று கூறினுர். பினனா, தேவர்களுககுக கொடுத்த வாக்குறுதியைக காகக ஸ்ரீமன் நாராயணன கௌசல்யையின மகனு கப் பிறந்தனன.

இவவாறு பிறநது வளாநத இரா மன கைகேயின் சூழசசியால நாட்டை விடடுக் காடடிறகுச சென்ருன். அப்போது சீதையை இழந்து தமபியின துணைகொணடு இராவணனை அழிதது மீணடான். இதனை அடிகள,

"...... .. தமபியொடு கான்போந்து
... . . தொலலிலஙகை கடடழிதத
சேவகன........... " (17.35. 2-4)

எனக கூறுகினருா.

**பஞ்சவர்ககுத தூது நடந்தோன்**

திருமால் தேவகியின் மணி வயிற் றில் எட்டாவது பிளளையாகப் பிறந்து ஆயாபாடியில் யசோதை வீட்டில் கணணன் எனும பெயா தாஙகி வளாநது வந்தான். இவ்வவதாரமும் கமசன் எனும் கொடியவனை அழிககத் திருமால் அவதரித்ததையே விளக்குவதாக அமைந்துளளது.

கணணன் பிளளைப பருவத்தில் வெணணெய்த திருடி உணடான (17:33.3). அதைக கணட யசோதை அவனைக் கயிற்ருல் கட்ட முயன ருள; முடியவிலலை. பினனா கண ணன வயிறறைச சுருககிக கொள் ளவே கடடினுள (17 32.3). பசுக களை மேயதத காலததில் குருந தொசித்தான (17.29.4) குழல ஊதி விளையாடினுன இதனை அடி கள 'கொனறையந் தீங்குழல் கேளாமோ!' 'ஆம்பலந தீங்குழல கேளாமோ' 'முல்லையநதீஙகுழல கேளாமோ' எனக் கூறுகின்ருர்

கௌரவா நூற்றுவாபால பாணட வா பொருட்டுத் தர்மததை நிலை நிறுத்தக கணணன் தூது செனருன. இதனை இளஙகோ

"...... ...நூறறுவாபா லுறறி
சையும போறறப்
படாநதா ரணமுழஙகப பஞசவர்ககுத
தூது
நடநதானே.... ...." (17.34·3)

எனறும,

"... ... ... பஞசவாககுத் தூதாக
நடநதவடி" (17:34 3)

என்றும பாடிப் பரவுகின்ருர்.

மேலும அருச்சுனன் சபதம் நிறைவேறுதற பொருட்டு கதிரைத் திகிரியால் மறைததான (17·26.1) உலகை உணடு ஆலிலை மேல துயின்ற னன (17:33.2) முதலிய கணணன் திருவிளையாடல பல ஆய்சசியர் குர வையில் வருகினறன.

இரணியன, இரணியாட்சகனின் சகோதரன. அவன பிரம்மாவை நோக்கித தவஞசெயது சாகாவரம் பெறருன பினனா திருமால பகத ஞகிய பிரகலாதனை இரணியன் துன புறுத்தலைக கணடு, வெகுணடு நர சிஙகமாயத தூணிற் ருேனறி அநதி வேளையில் இரணியனைக கொனருர்.

"மடஙகலாய் மாறடடாய மாயமோ
மருடகைததே" (17·34.4)

என்பதே அப்பாடல் வரி இதில் 'மடங்கல்' எனபது சிங்க உருவ மாகிய நரசிஙகத்தையும 'மாருட் டாய' எனபது அவன பகைவனுன இரணியனைக குறிக்கும இவையே திருமால அவதாரம் குறிதது வரு கினற செயதிகளாகும்

இவறறைத தவிர துறக்கததில இருநத அமுதம முதலிய உயாநத பொருடகளையெலலாம கடலில் புகு மாறு தூருவாச முனிவர் சாபமிட் டாா அபபொருளகளும அவ் வாறே புகுநதன. தேவாகள் அப் பொருள்களைப் பெற எண்ணினா. தேவாகளும அசுராகளும ஒனருகத திரணடு பாற்கடலைக கடைந்தனர்.

"பாம்பு கயிருக கடல கடைநத
மாயவன" (17:20.1)

"வடவரையை மததாககி வாசுகியை
நாணுக்கி
கடலவண்ணன பணபொருநாட்
கடலவயிறு கலககினையே" (17:32.1-6)

இவவாறு தீயோரை அழிக்க இறைவன் எடுத்த அவதாரஙகளைச் சிலமபு செவவனவே செப்புவதைக் காணலாம். ★

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K Subba Rao, M.A and Printed at T T D. Press by M. Vijayakumar Reddy Manager, T T D Press, Tirupati-517501.

